"And East and West, without a breath,
Mixed their dim lights, like Life and Death,
To broaden into boundless day."—*Tennyson.*

289

# A Message of Love From the Far West.

FROM THE REV. DR. CUTHBERT HALL, D. D.,

*President of the Union Theological Seminary and Barrows Lecturer in the University of Chicago for* 1902-03.

NEW YORK, *January 2nd, 1904.*

MY DEAR SIR,

Yesterday the first day of the new year, I had the honor and pleasure to receive your kind communication. I observed with gratification that you had written upon the cover " In all love and truth with best regards. " This kindly salutation meets with a warm response in my heart. You will permit me to send you in return my very best wishes for the New year and the hope that we may have further communication with one another.

I regret my limited acquaintance with the Indian languages prevents my entering fully into the substance of the pamphlet,* but I am able to discover in it the aspirations of a sincere seeker after a deeper knowledge of God. How wonderful it is that the Gospel of St. John is drawing to itself so may devout students, alike from the East and from the West.

My visit in India resulted in filling my heart with affectionate regard for Indians. I long to revisit your country and to come into closer fellowship with your people. I send my salutations to the Society with which you are connected and I remain,

DEAR SIR,

Very faithfully yours

CH. CUTHBERT HALL.

Mr. Satyananda S. Sarma.

* Godward Ho !

உ

கடவுள் துணை.

# ஆருத்ராதரிசனராதனுப் பத்திரம், 1904.

## விஷய சூசிகை.

"*Seek Truth wherever you can find it,*" But, "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star." "To Thine own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 12.] 1904-ம் ௵ ஜனவரி ௴ [இலக்கம் 9.

# A New Year's Greeting.

(FROM DR. G. U. POPE, M. A., D. D., OF OXFORD.)

## "மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்."

### * ஞானிகள்.

யாதும் ஊரே;—யாவருங் கேளிர்;—
தீதும் நன்றும் பிறர்தர வாரா;—
நோதலுந் தணிதலும் அவற்றோர் அன்ன;—
சாதலும் புதுவ தன்றே;—வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே;–முனிவின்
இன்னா தென்றலும் இலமே;—மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறலோர்
காட்சியிற் தெளிந்தனம்;—ஆகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே;—
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே!

'ஜி. யூ. போப்' ஆப்த பூர்வகமாய்
ஸர்வமங்கள ஸித்தியார்த்தம் அனுப்பியது.

OXFORD, *Jan.* 1, 1904.

### THE SAGES.

To us all towns are one, all men our kin.
Life's good comes not from other's gift, nor ill;
Man's pains and pains' relief are from within.
Death's no new thing; nor do our bosoms thrill
When joyous life seems like a luscious draught.
When grieved, we patient suffer; for we deem
This much-prized life of ours a fragile raft
Borne down the waters of some mountain stream
That o'er huge boulders roaring seeks the plain.
Tho' storms with lightnings' flash from darken'd skies]
Descend, the raft goes on as fates ordain.
Thus have we seen in visions of the wise!—
We marvel not at greatness of the great;
Still less despise we men of low estate.

G. U. POPE,
With all kindest good wishes.

* This Agaval is by a minstrel, known to us as Kanyan (or 'Singer') of the flowery hill, who was a court poet and friend of Kō Perum Coran of Urraiyùr,—a little, it may be, before the date of the *Kurral*. See *Purra Nanuuru*, 67, 191, 192, 212. Compare, Kurral 397, பழமொழி, 116.

# Arudradarisanam, 1904.

# ஆருத்ராதரிசனம், 1904.

சென்ற வருஷம் ஆருத்ராதரிசனத்துக்கு முன் நேர்ந்த 'கிறிஸ்த்மஸ்' என்று சொல்லும் கிறிஸ்து ஜனனநாளன்றி (டிசம்பர்மீ 25உ) நடராஜ மூர்த்தியை தியானித்துக்கொண்டிருக்கும்பொழுது, மாதங்களிலெல்லாம் ஸர்வோத்கிருஷ்டமான மார்கழிமாசம் பகவானுக்குப் பிரீதியான மாதமென்றும் அந்த மாதத்திலேயே அவர் தம் பக்தர்களுக்குக் கடாக்ஷவீக்ஷணமளித்து அவர்களைக் கரையேற்றக் கிருபை கூர்ந்த மாதமென்றும், அந்த மாதத்தில் எவனொருவன் பகவானை சுத்த ஹிருதயத்தோடு பஜிக்கிறானோ அவன் அதிசீக்கிரத்தில் ஆத்மதரிசன பாக்கியம் பெறுகிறானென்றும் பெரியோர் சொல்லியவை பிரத்தியக்ஷானுபவமாக நமக்கு விளங்கியது. மார்கழிமாசம் திருவாதிரை நக்ஷத்திரத்தன்று கொண்டாடப்படும் 'ஆருத்ராதரிசன' மஹோற்சவம் இந்த உண்மையையே ஐதிகமாகக் கோயில்களில் திருவிழாவாகக் கொண்டாடப்படுவதன்றி வேறல்ல. இது சிதம்பரத்தில் மிகசிலாக்கியமாகக் கொண்டாடப்படுகிறது. நடராஜமூர்த்தி தேரை விட்டிறங்கி, ராஜசபையில் ஆடம்பரமாய்க் கொலுவிருந்து அதை விட்டுப் புறப்பட்டு நடனம்செய்துகொண்டு கனகசபைக்குள் பிரவேசிக்கத் திரும்புகையில் அவர் தரிசனசேவையே ஆருத்ராதரிசனமாம். இது ஐதிகமுறை. ஆத்மார்த்தமாகப் பார்க்கில் பிரபஞ்சத்தில் பாசபெந்தங்களால் கட்டப்பட்டுழன்ற ஜீவன், சற்குருவையடைந்து அவர் கடாக்ஷவீக்ஷணம் பெற்று அந்த பாக்யத்தில் திரிபுரமாகிய தேகத்திரியங்களையும் அதற்கொப்பான திரிகுணங்களையும் எரித்து, அதாவது அறநீக்கி, ஸ்வயம்பிரகாசமாயுள்ள பிரத்யகாத்மன் தானே தானாய்த், தன்மயமாய்த், தனித்திருந்து, நிர்மலனாய், நிராலம்பனாய், நிர்விகாரியாய், 'நெற்றிக்கண்' என்று சொல்லும் 'பிரக்ஞானசட்சு'ப் பெற்றவனாய், அர்ச்சுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணபகவான் காட்டிய 'விசுவரூபதரிசனம்' போல் இந்த அண்டபிண்ட சராசரங்கள் அனைவற்றையும் தன்னுளொடுக்கி யிருக்கும் பகவானை அவரது உண்மை விளங்க உள்ளபடி பார்க்கப்பெற்று ஐயந்திரிபற அவர் மகிமையை உள்ளபடி உண்ணோக்கி யறிவதாம் 'ஆத்மதரிசனம்' என்னும் தத்ஸ்வரூபதரிசனமே ஆருத்ராதரிசனமாம். திருவாதிரையன்று பரமசிவன் தூயஹிருதயமுள்ள பக்தர்கள் ஒவ்வொருவர் ஹிருதயத்திலும் பிறந்து 'புனர்ஜன்மம்' என்று சொல்லும் பெறலரும் பெரும்பாக்கியத்தை யவர்களுக்கு அளிக்கிறார். "Unless you be born again, you cannot enter the Kingdom of heaven" என்று யேசு கிறிஸ்து இந்த உண்மையையே யெடுத்துச் சொல்லியிருக்கிறார். செத்துப் பிழைத்தாலன்றி சாவுக்குத் 'தப்புவதில்லை. இந்த 'செத்துப் பிழைத்த'லாம் 'சூக்ஷ்ம அனுபவத்தையே 'புனர்ஜன்மம்' என்றும் 'பிராம்மணத்துவம்' என்றும் 'Re-birth,' 'Resurrection,' 'Birth of the Christ child' 'Conversion' என்று பலவிதமாகச் சொல்லிக் கொண்டாடுகிறார்கள்.

தென்னிந்தியாவில் 'திருவாதிரைக்களி' யென்று களிகிண்டி பகவானுக்கு நைவேத்யம் செய்து, பிரசாதமாக அதைப் புசிப்பது வழக்கமாய் நடந்து வருகிறது. இதன் ஐதிகம்

என்னவென்றால்: மார்கழிமாசக்குளிரில் ஒரு ஏழைப் பிச்சைக்காரன் குளிரில் விறைக்கக் களிகிண்டி அதைத்தான் உண்ணுமுன் பரனுக்கு ஒரு கவளமாவது அளித்து மிஞ்சியதையே உண்கிறதென்னும் நியமம் பூண்டவனாதலால் அந்தக் களியையளிக்க யாரும் அகப்படாமல் அதைத் தானும் புசிக்கக்கூடாமல், 'சோவென்று கொட்டும் இந்த அடை மழையில் நான் யாரை யழைப்பேன், அழைத்தாலும் இந்தக் களியைப் புசிக்கயார்வருவார்க'ளென்று மனம்புழுங்கி உள்ளமுருக, உடம்பெலாம் வியர்க்க, அந்த அடைமழைக் குளிரில் அழுதுகொண்டிருந்தான்.

"ஈசனடியுமிராப் பகலுந்தன்னைப்
பாசத்துள்வைத்துப் பரிசுசெய்வார்களை"

என்றபடி, பரமசிவன் இந்த ஏழை நெஞ்சன் உள்ளங்குழைந்துருகுவதைக் கண்டு அவன் அவஸ்தை பொறுக்காதவராக ஒரு பரதேசியைப் போல் வேஷம் போட்டுவந்து அவன் கொடுத்த களியை வாங்கிப்புசித்து அதனால் அவனுக்குத் தமது ஒப்புயர்வற்ற வரப்பிரசாதமளித்துச் சென்றாரென்பது ஐதிகம். இந்த ஐதிகத்தை யனுசரித்தே இன்றைக்கும் 'திருவாதிரை நாளில் எவ்வளவு பணக்காரர்களும் ஏழைக்கெளியவனான பரமேசுவரன் ஸ்வபாவத்தையறிந்து 'களி' கிண்டி நைவேத்யம் செய்து அதை ஈசுவரப் பிரசாதமாகப் புசிக்கிறார்கள். இப்படி ஏழைக்கிரங்கியாகிய ஈசன், தாருகாவனத்திலுள்ள இருஷிகள் தாங்கள் தபசு, யக்ஞங்களில் சிறந்தவர்களென்றும் தங்களுக்குமிஞ்சி யொருவருமில்லை யென்றும் உள்ளேகருவித்து நிற்க, அவர்கள் உள்நிலையையுணர்ந்த ஈசுவரன் பிக்ஷாடன மூர்த்தியாக வேஷம் போட்டுக்கொண்டு, விஷ்ணுவம்சத்தை மோஹினிரூபமாக்கி, அத்தவவேடர் சிரைக்குலைத்து அவர்கள் கர்வத்தையெல்லாம் அடக்கியாண்டார். தேவர்களுமிப்படி கருவிக்க அவர்கள் உதவியெல்லாம் பயன்படாமற்செய்து, பக்கத்திலிருந்த உமையவளைப் பார்த்து அவள் புன்சிரிப்புமாத்திரத்தால் உண்டானதீயினால் திரிபுரசம்ஹாரம்செய்து தாம் ஏறியிருந்ததேரை விட்டிறங்கி திரிபுர தகன நீற்றுச் சாம்பலில் ஆனந்த நிர்த்தனம் செய்துகொண்டு பக்தர்களைப் பரிபாலிக்க ஒத்தைக்கால் தூக்கி அம்பலத்தாடி பொன்னம்பலம் சேர்ந்து அசைவற்று ஆடி அமர்ந்தார். இதைச் சென்றவருஷம் பிரசுரித்த ஆருத்ராதரிசனப் பத்திரத்தில் "மார்கழி மாசம் பாடும் ஆண்டிப்பாட்டு" என்னும் தலைப்பின்கீழ் பிரசுரித்த "மாயாண்டிச்சித்தன் ஞானப் பாட்டின்" கடைசியில் ஆகாசத்திலுண்டான அசரீரிவாக்கில் விளங்கினதாகச் சொல்லியிருப்பதிற்காணலாம்:—

"மார்கழிமாசந்திருவாதிரையும்-வரலாயிற்றையே
கார்குழலாள்மோகினியும்காரணப்பே-யாண்டியுமே கரைந்தவுருமாறிநின்று
பாரிலுள்ளபக்தர்கள்பரிபக்குவர்-பலருமுய்யப் பரங்கருணைமிகுதியாலே
திரிபுரமெரித்ததேஜோமயானந்தனுந்-தாள்கொடுத்தாள்வன், தரிசிக்கவாரீர்,
[வாரீரே."

யென்னும் வாக்கில் இதனுண்மையை யுள்ளபடியுணர்த்தி யிருக்கிறது.

அவதார புருஷர்களில் ஒருவராகிய யேசுகிறிஸ்துவும் அவர் தம் சிஷ்யர்களுக்கு மலையுச்சியில் செய்த உத்தம உபதேசத்தில் "Blessed are the poor in spirit: for their's is the Kingdom of heaven" என்று துவக்கி முமுக்ஷு லக்ஷணங்களை வெகு நன்றாகச்

சொல்லிக் காட்டியிருக்கிறார். அவர் உபதேசப்படி மோக்ஷகைவல்யத்துக்குப் பாத்திரமானோர் குணங்கள் பின்வருவனவாம்:—

(1) 'The poor in spirit'—(உலகப்பற்றற்ற) ஏழைபரதேசிகள் c. f. 'ஏழைக்கெளியன்.'

(2) 'They that mourn'—துன்புற்றோர். c. f. "தொழுதகைதுன்பந்துடைப்பாய், போற்றி"

"அளிபவர் உள்ளத்தமுதே போற்றி."—திருவாசகம்.

(3) 'The meek'—பொறுமை, அடக்கம் உடையோர். c. f. 'பொறுத்தார் பூமியாள்வார்.' 'தானடங்க ஊரடங்கும்' 'அடக்கமுடையார் ஆக்கமுடையார்.'

(4) 'They which do hunger & thirst after righteousness'—c. f. 'தன்னைத்தானறியத் தபித்தவர்கள் தான் குடிப்பார்.' 'தபித்துக்குடித்தார்க்குத் தாகமது அற்றுப்போம்'—ஆனந்தத்தாய்மொழி.

(5) 'The merciful'—கருணையுள்ளார்—c. f. 'உள்ளங்கனிந்தாரை யுள்ளபடி போற்றுவாயே'—ஆனந்தத்தாய்மொழி.

(6) 'The pure in heart'—அகத்தூய்மையுள்ளார். c. f. 'அத்தனருள்வேண்டில் அகந்தூய வேண்டும்.'—ஆனந்தத்தாய்மொழி.

(7) 'The peacemakers'—சாந்த ஸ்வரூபிகளான ஸாத்விகர்.

(8) 'They which are persecuted for righteousness' sake'—'சத்யத்துக்காகத் துன்பப் படுத்தப்படுவோர்' c. f. பிரகலாதன், அரிச்சந்திரன்.

இப்படி அவர் சொல்லும் ஒவ்வொரு குணத்துக்கும் நம் சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் ஐதிகபர்வமான கதைகள் அநேக மிருக்கின்றன. இக்கதைகளின் உட்கருத்தை யுணரமாட்டாதவர்கள் இவைகளை யிகழ்ந்து பேசுவார்கள். உண்மையறியவல்லோர் இவைகளையியற்றிய பெரியோர்களின் சூக்ஷ்மபுத்தியைக்கண்டு வியப்பார்கள். இப்படியாக ஸத்யம் ஒன்றாகவிருக்க, அதைக் காலதேச வர்த்தமானங்களுக்கிசையவும் அவரவர் மனோநிலைக்கேற்கவும் இசைத்துச் சொல்லப்புகும்போது பலபல விதமாகத் தோற்றுகின்றது. ஆனால் இந்த வித்யாசமெல்லாம் தோற்றமாத்திரமேயன்றி உள்ளாய்ந்து பார்த்தால் எல்லாம் ஒரே தத்வத்தை விளக்குவதாயிருக்கும். தத்வங்களெல்லாங் கடந்துள்ள ஸத்யமாம் கடவுளை தத்வங்களையுணர்ந்து அவைகளையெல்லாம் தள்ளிப்பார்க்கும் சித்திபெற்ற உத்தம புருஷர்களே யறியற்பாலராம். அறிவுக்கெட்டாததொன்றை அறிவது எப்படியென்றால், 'உளவறிவாயிருந்தறிந்து' 'அறிந்த அறிவும் அழிய' அநுபவித்துக்கொண்டிருக்கும் தன்மையில் சாக்ஷாத்கார ஸ்வரூபமாக விருந்தறிதலே அறிவாம். இதை வாக்கால் மனதால் சொல்லத்தரமன்று. ஸ்வாநுபவத்தாலே யுணரல் வேண்டும். இப்படி யுணர்ந்தநுபவித்துக் கொண்டிருக்கையில் நமக்குச் சீமையிலிருந்து ஒரு கடிதம் வந்தது. சமாதி கலைந்து ஜாக்ரத்திருந்து அதையுள்ளேபார்க்க

அதில் கீழ்வரும் சுந்திரவசனம் திவ்யமந்திரமாக இலங்கக்கண்டோம். * கண்டு களித்தோம். களித்ததனுண்மையையுணர்ந்து சிந்திக்கத் தியானங் கைகூடிக் "கடவுளுநானுமொன்றுனேன்' என்று சொல்லிய அந்த திவ்யமங்கள ஸ்வரூபியின் தேஜோமயானந்த நிலையையுணர்ந்து உள்ளத்திற்றெரிசித்தோம். தெரிசித்ததின் பலனும் உள்மலங்கழியப்,

" புன்புலால்யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாமுருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமேபிறப்பே இறப்போடு மயக்காம்
தொடக்கெலா மறுத்தநற் சோதி
இன்பமேயுன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.''

என்னும் திருப்பாவினுல் ஸ்ரீமணிவாசகப்பெருமானுர் முத்திக்கலப்புரைத்துக்காட்டிய 'பரசுகம்' இத்தகைத்தாமென அவர் 'திருவுள்ளக்கிடை' இருந்தவாறு விளங்கலாயிற்று. 'எனையாளு மீசன்' இவ்வாருக இவ்வேழையேனுக்கிரங்கி 'ஆருத்ராதரிசனம்' தந்தருளினர். கண்டேன்! களித்தேன்! குதித்தேன்! அழுதரற்றி யானந்தத்தாழ்ந்தி யபர்ந்தேன்! அமர்ந்தேன்! அடைந்தேன் அவர் பாதம்! அல்லலறுத் தாட்கொண்ட அம்பிகையைக் கண்டேன்! கைகுவித்துத் தொழுதேன்! பேச்சற்றுநின்றேன்! பெருநிதியம் பெற்றேன்! கார்முகிலொப்பக் கனமழை பொழியும் அவன் கருணைவெள்ளத்தில் வீழ்ந்தேன்! அற்றேன், பெற்றேன், பிழைத்தேன்! பேரருள் சுரக்கும் பிஞ்ஞகன் மதலை நீண்முகன் தம்பி வேலவனேடும் பேயனுமென்றன் பிழையெலாம் பொறுத்துத் தேவர்க்குமரிதாம் தெரிசனமளித்து "நிர்வாண" நிலைதனில் நிதர்சனமாயினன்.

" பண்டேபயில்தொறும் இன்றேபயில்தொறும்
ஒளிக்குஞ்சோரனைக் கண்டனம்.
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்பிணையலில்
தாள் தளையிடுமின்

* He came Meek and Lowly in Heart, and full of Infinite Pity, for all those who call upon Him for aid.

Wishing you
all the Blessings
of the
Manger Throne,
With Love,
(I hope to write at length)
என்றைக்கும் வாழ்க!
G. U. Pope

* பொறுமையும் தாழ்மையும் பூததயைநிறைப் புனிதமாம் ஹிருதயமும் பொருந்தத், தஞ்சமென் றடைந்தார்க்கஞ்சலென்றுற்றுவான் தோன்றினன் அருள்நிறை வள்ளலே. †

தொட்டியிற் பிறந்த தொன்மறை பூரணன் அன்பர்க்களிக்கும். ஆனந்தம் பொங்குக.

'G. U. Pope' அன்போடனுப்பியது.
'என்றைக்கும் வாழ்க!'

† Comp. "அறிவிலாச் சிவனையருளொடுசாத்திட, அறிவிலாவுலகம் அழியாதருள்செய, அறிவிலாஊனர்கள் அறிவறிந்துய்ய, அறிவிலருளரியவனுதித்தானே."
Godward Ho! ஜகத்- சிஷ்டி, 16.

சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமினென்றவர் பற்றுமுற்று ஒளித்தும் [1]
தன்னேர் இல்லோன் தானேயான தன்மை [2]
என்னேர் அனையோர் கேட்கவந்தியம்பி
[3] அறைகூவி ஆட்கொண்டருளி,
மறையோர் கோலங்காட்டி அருளலும்
உலையா அன்பென்புருக ஓலமிட்டு
அலைகடற்றிரையி னார்த்தார்த் தோங்கித் [4]
தலைதடுமாறாவீழ்ந்து, புரண்டலறிப்
பித்தரின்மயங்கி, மத்தரின் மதித்து,
நாட்டவர்மருளவுங் கேட்டவர்வியப்பவுங்,
கடக்களிறேற்றாத் தடப்பெருமதத்தின் [5]
ஆற்றேனாக, அவயவஞ்சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்; [6]
ஏற்றார்மூதூர் எழில்நகையெரியின் வீழ்வித்தாங்கன்று [7]
அருட்பெருந்தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வாழாமை யொடுக்கினன், [8]
தடக்கையின் நெல்லிக்கனியெனக்காயினன்.''—திருவாசகம்.

ஓம் தத் ஸத்.

---

## SIR OLIVER LODGE ON THE POSITION OF SCIENCE TO-DAY.

# மேற்றிசைக்கலைக்ஞான விர்த்தியின் தற்காலநிலைமை.

## 'ஸர் ஆலிவர் லாட்ஜ்' அபிப்பிராயம்.

---

மேற்றிசையாம் ஐரோப்பிய அமெரிக்கா தேசங்களில் விளங்கும் கலைக்ஞான சாஸ்திர விற்பன்னர் கலைக்ஞான விர்த்தியைப்பற்றியும் அதன் தற்கால நிலைமை வருங்கால விர்த்தியைப்பற்றியும் மிகச் சிந்தித்து வருகிறார்கள். இப்பொழுது சாஸ்திர விற்பன்னர்கள் நூதனமாய்க் கண்டுபிடித்துள்ள விஷயங்களும் உண்மைகளும் அவர்களுடைய பூர்வசித்தாந்தங்களைத்

---

1. பற்றுமின் என்றவர்களுடைய பற்றுக்குமுற்றும் ஒளித்தும்.
2. தனக்குவமையில்லாதோன் தானே தானாயிருந்த தன்மையை.
3. அறைகூவி—வலிந்தழைத்து.
4. அலையின்றகடலின் அலைகளைப்போல இரைந்திரைந்து மேலெழுந்து.
5. மதயானையும் ஏற்கப்பெறாத மிகப்பெரிய மதத்தினால் ஆற்றாதவனாகும்படி.
6. சுவைதருங் (கோல்தேன்) கொழுந்தேன்கொண்டு அவயவம் (புளகாங்கிக்கச்) செய்தனன்.
7. ஏற்றார்-எதிர்த்தவர்கள் (திரிபுராசுரன்) 'மூதூர்'-திரிபுரமாகியபழையவூரை அழகியசிரிப்பாகியநெருப்பில் வீழ்த்தி; 'ஆங்கு அன்று-' அவ்விடத்தில் அப்போது.
8. அருட்தீயினால் மும்மலம்போக்கித் 'திரிபுரமெரித்த தேஜோமயானந்தனாய்த்தாள்கொடுத்தாண்டவன்.'

திருத்திக் கொள்ளவேண்டிய தவசியமாகச் செய்துவிட்டது. பிரபஞ்சத்திலுள்ள வஸ்துக்க
ளெல்லாம் அணுப்பிரமாணமானவையே யென்றும் இந்த அணுக்கூட்டங்கள் மாறுகிறதில்லை
யென்றும் சாதித்து வந்தது போய் இப்பொழுது ஒவ்வொரு அணுவும் மின்னல்போல் பிரகாசிக்
கும் லெக்ஷம் கோடிக்கணக்கான ரேணுக்கள் சேர்ந்துள்ள கூட்டம் போலிருக்கிறதென்றும்;
இந்த மின்னொளிக் கூட்டத்திலிருந்து ஒவ்வொரு ரேணுபிரிந்து கதிரொளிபோல் ஒளிவிசிப்
பிரகாசித்துக்கொண்டு போகிறதென்றும் அப்பொழுது பூர்வ அணு பெரிதும், சிறிதுமான
இரண்டு பாகமாகப் பிரிகிறதென்றும், இந்த அணுவிலுள்ள ரேணுக்களுக்கு 'Electrons' என்று
பேர் எனவும் கண்டு பிடித்திருக்கிறார்கள். 50-வருஷங்களுக்குமுன் ஜீவரூபங்களெல்லாம்
இனம் விட்டு இனம் மாறுகிறதில்லையென்று நம்பியிருந்தது போய் 'டார்வின்'காலம் முதல்
எல்லா ஜீவதேகங்களும் Protoplasm என்னும் மூலப்பிரமாணமான ஜீவ அணுவினின்று பரி
ணாம விதிபற்றி விர்த்தியானவையே யன்றி வேறல்லவென்று கண்டு நிச்சயித்திருக்கிறார்கள்.
'X Rays' என்னும் சூக்ஷ்மப்பிரகாசம் என்ன, 'Radium' என்னும் அற்புத சூடாமணியாம்
நூதன வஸ்துவென்ன, இதுகாறும் உயிரற்றவை யென்று தீர்மானித்திருந்த உலோகங்கள்
(inorganic matter) முதலானவைகளில் உயிர்ச்சின்னமிருப்பதாக மிஸ்டர் 'போஸ்' கண்டுபிடித்த
நூதன உண்மையென்ன, இவையெல்லாம் இப்பொழுது இதுகாறும் கலைக்கியானிகள் உறுதி
யாய் நம்பியிருந்த உண்மைகளை யெல்லாம் மாற்றும்படி செய்துவிட்டன. பிரகிருதி வஸ்துக்
கள் எல்லாவற்றையும் 66 (elements) பிரதமப்பொருள்களாகப் பிரித்து இவைகளின் அணுக்
கள் ஒன்று மற்றொன்றாக மாறுவதில்லை யென்று சாதித்துப் போதித்து வந்தார்கள். இப்பொ
ழுது 'Radium' என்னும் வஸ்துவிலிருந்து 'Helium' என்னும் அதற்கு வேறான மற்றொரு
வஸ்து உண்டாகக் கண்கூடாகப் பிரத்தியக்ஷப் பிரமாணமாய்ப் பார்த்தபின் அந்தப் பழையவிதி
நம்பத்தக்கதில்லை யென்று கண்டுவிட்டார்கள். ஈயத்திலிருந்து செம்பு உண்டாகமாட்டாது
என்று நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை யென்று தியங்குகிறார்கள். சிலவஸ்துக்களை அணுப்பிர
மாணமாகப் பிரிக்குங்கால் ஸ்தூலப்பிரமாணமான ரூபமுமின்றி ஸ்தூலரூபத்தின் ஆவியென்று
சொல்லத்தக்க (Electricity) எனும் மின்சாரரூபமாகத் தோற்றுகின்றது. இப்படியெல்லாம்
மேற்றிசைக்கலைக்கியானியர் இவ்வித அனேக நூதனதத்துவங்களை ஐயமற உணர்ந்த காரணத்
தால் அவர்களுடைய பழைய சித்தாந்தங்களெல்லாம் நிலைதடுமாறி அவர்களும் தலைதடுமாறித்
தியங்கி மயங்கினவர்களா யிருக்கிறார்கள். இப்பொழுது "எல்லாம் அறிந்தாய்விட்டது" "இனி
அறியக்கூடியதில்லை" என்று ஆசுடியம் பேசுவது யாருக்கும் தகாது என்று கண்டு, அகம்பா
வங்குறைந்தவர்களாய் உண்மையை உள்ளபடி யறிவதில் சிரத்தையுள்ளவர்களாக வுழைத்து
வருகிறார்கள். இதெல்லாம் அவர்களில் பிரதமஸ்தர்களாயுள்ளோர் நிலை. மற்றப்படியுள்ள
குட்டி வித்வான்களும் சாஸ்திரக்காரர்களும் தாங்கள் பிடித்தமுயலுக்கு மூன்றேகால்கள் தானு
ண்டென்று வன்பேச்சுப்பேசி வழக்கம்போல் வீண்படாடோபங்கள்செய்து வருகிறார்கள்.

ஸர் ஆலிவர் லாட்ஜ் என்பவர் மேற்றிசைக் கலைக்கியானிகளில் அதிக மேன்
மைபெற்ற பிரதமஸ்தர்களுள் ஒருவராய் விளங்குபவர். இவர் மேலே வரைந்த விவரங்களை யெல்
லாம் இன்னும் விஸ்தாரமாக வெடுத்துச் சொல்லி, "உயிர், என்றால் என்ன?" என்கிற கேள்

விக்கு இன்னும் பதில் சொல்ல அறியாதவர்களாகவே யிருக்கிறோமென்று ஒப்புக்கொள்கிறார். மிஸ்டர் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் இறந்தபோது அவருடைய மேலான சித்தாந்தங்களைப்பற்றிப் பிரசங்கித்த மிஸ்டர் லியோனார்ட் கோர்ட்னியவர்கள் 'இந்த தேகத்தில் புகுந்து இதை ஆட்டி வைக்கும் சீவன் அழிவற்றதென்றால் அது ஆதியிலென்னமாயிருந்தது? இத்தேகத்தை விட்டுப்பிரிந்தபின் அதன் கதியென்னவாகிறது?' என்னும் கேள்விகளுக்கு உத்தரம் கண்டு சொல்ல நம் ஆசிரியரா லாகவில்லையென்று சிஷ்யபாவம் பாராட்டிச் சொன்னார். அப்படியே ஸர் ஆலிவர் லாட்ஜ் அவர்களும் இந்தப் பிரபஞ்சத்தின் உண்மை யென்னவென்று உணரமாட்டாதவராய், இது மாயாரூபமென்பதை மட்டும் ஊகமாய் எடுத்துச் சொல்லுகிறார். **மாயை** என்பது அநிர்வாச்சியம்: அதாவது இருக்கு என்றும் இல்லையென்றும் சொல்லக்கூடாததாயிருப்பது. தோன்றிமறைதலே ஸ்வபாவமாக வுள்ளவொன்றை இருக்கென்றாவது இல்லையென்றாவது எப்படிச்சொல்லுகிறது. இப்பிரபஞ்சம் லையற்றது: அதாவது சதா உருமாறிக் கொண்டேயிருக்குந்தன்மையது. இப்படி மாறுதலையே தன்னிருப்புக்கு ஆதாரமாகவுள்ளது எதுவோ அது மாயை. இந்த மாயாரூபமானது இப்பிரபஞ்சம் என்பது நமது தத்துவஞானிகள் அநுபவசித்தாந்தம். இந்த உண்மையையே ஸர் ஆலிவர் லாட்ஜ் அவர்கள் ஊகையினால் ஒரு விதத்திலுணர்ந்து, உணர்ந்ததை சாஸ்திர உண்மைகளுக்கு ஒப்பச்சொல்கிறார். அவர் சொல்வது என்னவென்றால்:— * "ஜீவதேகமுள்ள எதற்கும் ஓயாமாறுதல் இன்றியமையா தமைந்துள்ள ஸ்வபாவமாக விருக்கிறது. இந்த ஸ்வபாவம் வெளிப்படையாகவாவது, உள்ளடக்கமாகவாவது இருந்து தன்தொழிலை ஓயாது நடத்திவருகிறது. ஜீவதேகங்களுக் குண்மையான இந்த நிலை இப்பிரபஞ்ச முழுவதும் எங்கே பார்த்தாலும் வியாபித்து நிற்கிறது பிரத்தியக்ஷம்."

இந்த உண்மையை உள்ளதாக ஒத்துக்கொண்டபின் இப்படியிருப்பதின் அர்த்தம் என்ன? இதிலிருந்து நாமுணருவதென்ன? என்று கேட்கிறார். இதற்குமேல் துணிந்து ஊகிக்க அவருக்குமனந்துணியவில்லை. ஆகையால் 'இதற்குமேல் ஊகிக்க இன்னும் காலம் வரவில்லை' யென்று தம்மட்டிற்கு இக்கேள்விக்கு சரியானஉத்தரமின்றி விட்டு, இவரிலுந் துணிந்து முன்சென்ற வேறுசிலர் ஊகித்திருப்பதைத் தாம் அங்கீகரித்தெடுத்துக் கூறுகிறார்.

'சடம், சிவன்' 'வஸ்து, மனது' 'தேகம், ஆத்மா' என்றுசொல்லும் இவைகளின் சம்பந்தா சம்பந்தத்தை உள்ளபடி உணர்ந்தார் இவர்களில் யாருமில்லை. இவர்கள் பரிணாமவிதிபற்றிக்கோர்வையாய்க்கண்டுபிடித்தறிந்துவந்த உண்மை இங்கு தடைபட்டு நின்றுபோகிறது. இகம் பரம் இரண்டிற்கும் மத்தியிலுள்ள காரிருள் நிறைந்த இந்த இடைவெளியைத் தாண்டத் துணிவாரில்லை. இவ்விருகரையையும் சேர்க்கப்பாலங்கட்டி முடிப்பாருமில்லை. இங்கே வந்ததும் சங்கிலி பூட்டுவிட்டுப்போகிறது. 'Missing link' எனுமிதைக்கண்டுபிடித்துச்சேர்ப்பதற்கு வேண்டியசக்திதான் நம்மேற்றிசைக் கலைக்கியானிகளிடமில்லை. விக்ஞானிகளும் துணிவதில்லை. அகன்றிருண்டபரந்த † இவ்விடைவெளியைத் தாண்டுமுயற்சி மிகப்பிரயாசமானது.

* "The potentiality or the actuality of constant change is at least a concomitant of every form of life; and now this same condition is found to be running through the whole material universe." Sir Oliver Lodge's own words.

† இதை 'Great chasm' என்றும் 'Yawning Gulf' என்றும் உருவகமாய்க்கூறுவர்.

இதை மதவழிபற்றிச்செல்வோர் 'நெருப்பாறு மயிர்ப்பாலம் தாண்டுவதாக'ச் சொல்வர். கிறிஸ்துவும் அவரை நம்பி அவர்வழிபற்றிச் சென்ற மதசிரேஷ்டர்களும் இவ்விடைவெளியைத் தாண்டிச் சென்றிருக்கிறார்கள். ஆனால் நமது கலைக்கியான சிரேஷ்டர்கள் பகிர்முக தரிசனத்தாலே எல்லாவற்றையும் பரீக்ஷித்தறியவேண்டுமென்கிறபிடிவாதம் கைப்பற்றினவர்கள். இதைத்தாண்ட 'பக்தி' யென்னும் சக்திவேண்டும். (Faith) என்று சொல்லும் இந்த சக்தியின்றி இதைத்தாண்ட முடியாது. இஃதிருந்தால் இதற்கின்றியமையாத இன்னொரு சாதனமாம் 'குருகடாக்ஷம்' என்றுசொல்லும் ஈசுவரகிருபையும் கிடைக்கும். புத்திவன்மையும் துணிவும் ஹிருதயசுத்தியு முள்ளவர்களுக்கு இவை தம்மாலே கிடைக்கும். இதையவர்கள் அறிந்து ஒப்புக்கொண்டாலும் சரி ஒப்புக்கொள்ளாவிட்டாலும் சரி. குருபக்தி யில்லாதவர்களுக்கு இது பிரத்தியக்ஷமாவது துர்லபம். யோகசித்திகள் பெற்றமஹான்களாகிய பதஞ்சலி, சுகர், முதலானவர்களுக்கும் சந்தேகங்கள் வந்து மூண்டுகொண்டனவென்றால் மற்றவர்களுக்குக் கேட்பானேன். ஆகையால் உண்மையை ஒருவிதத்திலறிந்தாலும் அறிந்ததை யனுபவிக்க முதலில் ஹிருதயசுத்தியும் பூர்ணநம்பிக்கையும் வேண்டும். அன்றி சடஜீவ பேதாபேதங்களை யுள்ளபடி யறிந்தவனுக்கு ப்ரம்ம முடிச்சாம் இந்தப் பிரபஞ்சமாயை (Mystery of Life) தானாக அவிழ்பட்டுப்போம். அதுவரையில் மனுஷன் தன்னுடைய கிஞ்சிக்ஞசக்தியினால் துணிவுற்று ஊகிக்கத்தான் ஊகிக்கலாம். எவனும் ஸ்வானுபவத்தி லறியக்கூடிய உண்மையை, அதற்கு அந்நியமாயிருந்து நிரூபிக்கவாவது உணரவாவது எவருக்கும் அசாத்தியமாம். இந்தவியாக்கியானத்தோடு இனி ஸர் ஆலிவர் லாட்ஜ் அவர்கள் சொல்வதை யெடுத்துக் கூறுவோம். அவர் சால்ந்கிறார்:—"உடலுக்கு முயிருக்குமுள்ள சம்பந்தத்தை யுள்ளபடி யுணரத் தற்காலம் துணிந்து சொல்ல மனமெழாவிட்டாலும், வேறுசிலர் துணிந்து, உள்ளமர்மத்தை ஒருவாறு ஊகித் தறிதிருக்கிறார்கள். இவர்கள் சுற்றிச் சுற்றியாராய்ந்தாலும் (Matter) சடரூபமான எதுவும் மனதுக்கு வாகனமாம் கருவியாகவுள்ளதே யன்றிவேறல்ல: புலன் பொறியறிவுகளால் நமது அறிவுக்குப்படும் விஷயங்களால் அந்தர்யாமியிருக்கும் அழிவற்ற வஸ்துவின் தன்மையின்னதென்றுணர்ந்துகொள்ள உளவு ஒன்றும் கிடைப்பதில்லை. அந்தர்யாமியாயிருக்கும் ஆதிமூலப்பொருள் எதுவோ அதை நாமறியோம். ஆனால் அதில் ஒரு அம்சமின்றி நம்தேகங்கள் உண்டாக வில்லையென்பது மட்டும் நிச்சயம். ("அவனன்றியோரணுவு மசையாது" என்பதினுண்மையை இங்கே அறிந்து கிரகிக்கவேண்டியது.) நாம் என்னும் எண்ணங்கள் நமது மூளையின் உருவத்தில் பதிந்து அந்த மூளையினணுக்களுருவத்தில் எண்ணத்துக்குத்தக்க மாறுதலுண்டுபண்ணுவது வாஸ்தவமென்று நம்பக்கூடியதாயிருக்கிறது. இப்படியே உலகத்திலுண்டாகும் எப்பொருளின் அசைவும் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாயிருக்கும் ஒரு பரம்பொருளின் எண்ணத்தால் பாதிக்கப்படுகிறதென்று சடப்பொருள்களென்று சொல்லுமவற்றிலும் தோன்றக் கூடியதாயிருக்கிறது. இது உண்மையென்று ஏற்படுமாயின் அப்பொழுது இதற்கெல்லாம் காரணமான ஸர்வக்ஞ புருஷன் யார் என்று விசாரிக்கப் புகுவோம்." (லோகாயதமத சித்தாந்தத்தையே சத்தியமாகக்கொண்டு புறப்பட்டவர்கள் ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்று தீராப்பொறியாக விசாரிக்கும்படியான ஸ்திதிக்கு பலாத்காரமாகத் தள்ளிக்கொண்டு போகப்படுகிறார்கள்.) இந்த நிலைக்கு வந்தவர் இனிஜாக்கிரதையாக விருக்க

வேண்டுமென்று எச்சரிக்கிறார். பூர்வமதங்களை யெல்லாம் பொய்யென்று கண்டித்துபிருதுகட்டி சத்தியக்கொடிநாட்ட யத்தனித்த மேற்றிசையாராய்ச்சி முறைபற்றிய "சாஸ்திரம்" அனேக நூற்றாண்டுகளாக கைக்குழந்தைபோல் துணியில்சுற்றிக் கைகால் அசைக்கமுடியாமல் கிடத்தப்பட்டு வந்ததென்றும்; நியூடன், காலிலியோ இவர்கள் கையைக்காலை யுதறிக்கொண்டு படாதபாடுபட்டு மேல்துணியை ஒதுக்கித் தள்ளிவிட்டார்களென்றும்; இன்னும் 50-வருஷ காலத்தில் எவ்வளவோ அதிசயமான நூதன உண்மைகள் வெளியாகப் போகின்றனவென்றும் சொல்கிறார். மேற்றிசையார் இப்பொழுதுதான் சிசுத்தன்மை நீங்கி குழந்தைப்பருவமடைந்து தொட்டிலிலிருந்து விளிம்புக்கப்பால் எட்டிப்பார்த்து வருகிறார்களென்றும், இப்படிப் பார்க்கும்குழந்தை முதலில் தன்கண்ணுக்குப் படுவதைக்கண்டுப்பயப்படுவது சகஜந்தானேயென்றும், அவர்கள் பயந்தெளியக் காலமும் வயதும் செல்லவேண்டுமென்றும் சொல்கிறார். அடுத்த நூற்றாண்டில் மனுஷஜாதியார் மொத்தத்தில் இப்பொழுதைவிட எவ்வளவோ மேலாய்விளங்குவார்களென்றும், இக்காலத்து தத்துவசாஸ்திரிகளுக்குள்ள அறிவு அக்காலத்து சாதாரண மனுஷர்களுக்கிருக்குமென்றும், மனுஷன் என்னதான் முன்னடைந்து விர்த்திக்குவந்தாலும் அவனுக்கும் அறிவுக் கெட்டாத கடவுளினுண்மைக்கும் "தூராதிதூரம் சொல்லத்தொலையாது" என்று ஔவையார் சொன்னபடி வெகுதூரமாகவே யிருக்குமென்றும் சொல்கிறார். இது உண்மை. எக்காலத்திலும் கடவுளின் உண்மையை உள்ளபடியறிந்தவர்கள் சொற்பமாகவே யிருப்பார்கள். ஆயினும் அவன் 'ஏழைக்கெளியவன்' என்பது மட்டும் பொய்யாகாது. ஆகையால் பகவானை ஹிருதய சுத்தியோடு பக்திசெய்து பஜித்து வருகிறவர்கள் எப்போதும் அவன் திருவருட் பிரகாசத்துக்குப் பாத்திரராகவே யிருப்பார்கள் என்பது திண்ணம்.

## "பகவத்கீதை வசனம்."—முகவுரை.

ஸ்வானுபவச் செல்வியாம்

**செங்கோட்டை ஆவிடையாரம்மாள்.**

இதற்கு இரண்டு மூன்று தலைமுறைகளுக்குமுன் திருநெல்வேலி ஜில்லாப்பக்கத்திலுள்ள செங்கோட்டையிலுதித்த பெண்மணி யொருவளிருந்தாள். இவள் பிராம்மணகுலத்திலவதரித்தவராதலால் இந்நாட்டு வழக்கம்போல் பாலப்பருவத்திலேயே பாணிக்ரகணம் செய்துகொடுக்கப்பெற்றுப் பத்து வயதாகுமுன்னமே பர்த்தாவையிழந்து *'பாலவிதந்து' என்றுசொல்லும் அஞ்ஞானபரம்பரையாய் அவதரித்து 'வேதபூமி'யென்று பேர்பெற்ற இப்பரதக்கண்டத்திற்கே அற்புதமாயுள்ள அனாத்தகோஷ்டியில் சேர்ந்தவரானார். தன்னறிவு, தன்னிச்சை, தன்சம்மதி யென்றுசொல்லும் ஸ்வேச்சை மனிதர்க்குரிய ஒரு சுதந்தரமுமின்றி 'தன்விதி' யென்று வழங்கும் கொடிய வல்விலங்குவாய்ப்பட்டு, தானறியாப்பருவத்தே தர்மாதர்ம விசாரமின்றி பலாத்காரமாய்த்தானே 'பாலவிதந்து' கோஷ்டியில் கொண்டுபோய்ச் சேர்க்

* 'பாலபிரமசாரிணி' யெனும் பேர் இவர்களிருக்கவேண்டிய நேர்மைக்கும் தூய்மைக்கும் உண்மையில் உள்ளபடி பொருந்தும்.

கப்பட்டபின், உத்தமசித்தம் வாய்ந்த விப்ரசிகாமணியாம் இப்பெண்ணரசி "கேள்விமுறையில்லையோநாதா" வென்று யாரை நொந்து வருந்தினளோ! எத்துயர்ப்பட்டழுதனளோ! தெரிய வகையில்லை. தெய்வமேயறியும். இப்படியிருந்து வளர்ந்து வருங்காலத்தில் ஒருநாள் பாகவதசிரேஷ்டரொருவர் தெருவோடு பகவத்கீர்த்தனைசெய்து கொண்டு தெருவுமத்தியில் நின்று அமுதுபடியளிப்பார்க்கு ஆசீர்வசனம் சொல்லி முகத்தில் பிரம்மதேஜஸ் விளங்க உள்ளங்கனிய உடல்நெக்குவிட்டுருக பகவானைப்பற்றித் தோத்திரங்கள் பாடிக்கொண்டுபோனார். அவரைப் பார்க்கவும் அவர் திருவடியில் விழுந்து பணிந்து அமுதுபடியளந்தால் தனக்கு அமிர்தபிக்ஷை கிடைக்குமென்று உள்ளத்தில் தோன்ற, கைம்பெண் வெளிவரக்கூடாதென்கிற கட்டுக்குட் பட்டு தன் தாயாரை விளித்து "அம்மா அப்பெரியவரைப் பணிந்து சற்று இங்குவந்து திருவருள் சாதித்துப்போகப் பிரார்த்திக்கிறேன் என்று சொல்லேன்" என்று கேட்டுக்கொண்டாள். அவ்வன்னையவளும் அப்படியேசெய்ய, அவருக்குத் தன்கையால் திருவமுதுபடியிட்டு, மனங்குழைய அவரைப் பிரதக்ஷணம்செய்து காலில்விழுந்து கண்கலங்க பக்தி நிறைந்து தலைகுனிந்து நின்றாள். பாகவதரும் கைநீட்டி ஆசீர்வசனம்கூறிப் போய்விட்டார். பின்னொருநாள் ஆற்றங் கரையில் ஸ்நானத்துக்குப் போனபொழுது அந்த பாகவதர் பல்விளக்கி விட்டெறிந்த மாவிலைப் பிச்சத்தை அன்போடெடுத்து ஆதரவோடு வாயில் வைத்துக்கொண்டாள். இதைப்பார்த்த பெரியவர், அவளை நெருங்கி "அம்மா, அது எச்சிலாயிற்றே, குலாசார ஜனாசாரத்துக்கு விருத்தமாய் அதையெடுத்து வாயில் வைத்துக்கொள்வதேன்?" என்று உளங்கனிந்துகேட்டார். அதற்கு அப்பெண்மணி "ஸ்வாமி, பெரியவாள் உச்சிஷ்டம் உட்கொண்டால் உத்தம பக்தியும் கடவுள் கிருபையும் கிடைக்குமென்று சொல்வார்களாதலால், அந்தவசனம் இவ்வேழையேனுக்குப் பலிக்காதாவென்று நினைத்து அப்படிச் செய்தேன்" என்று சொல்லிச்சும்மாவிருந்தாள். ஸ்வானுபவச் செல்வராகிய அந்த பாகவதசிரேஷ்டர் "அப்படியா அம்மா, பரம சிலாக்கியம்: பக்தியினாலாகாத தொன்றில்லை" யென்று விட்டு, "ஸ்நானம்செய், பகவத் சங்கல்பம் எப்படியோ பார்ப்போம்" என்று சொல்லி, தானும் ஸ்நானம்செய்து ஜபதபகர்மங்களைச் செய்யத்துவக்கினார். அப்பெண்மணி ஸ்நானம் செய்துமுடித்தும் அவருடைய அனுமதியின்றி வீடு போக மனம் வராமல் அவர் ஜபதபம் செய்து கொண்டிருந்த அசுவத்த விருக்ஷத்தின் மேடைக் கருகேயே, குனிந்த தலையோடு கட்டைவிரலைப் பார்த்தகண்களும் அவரிடத்தில் பக்தி பூர்வமாய்ப் பதிந்த சிந்தையுமாய் நின்றுகொண்டிருக்க, தியான சமாதியிலிருந்து கண்விழித்த ஸ்வானுபவச்செல்வராம் பாகவதசிரேஷ்டர் "ஏனம்மா ஈரப்புடைவையோடு இத்தனை நேரமாக நின்றுகொண்டிருக்கிறாயே" என்று அன்புகூர்ந்து கேட்க, "என்னவோ இவ்விடத்தை விட்டுப் போக மனம் வரவில்லை: பகவத்கடாக்ஷம் தங்கள் மூலமாகவே கிடைக்கப் போகிறதென்று காத்திருக்கிறேன்" என்று செப்பினள். சமாதிநிலையில் அப்பெண்ணின் உள்நிலையையும் அவளுடைய பக்தி முதிர்ச்சியினால் அவளுக்கு பரிபாககாலம் கிட்டியதையும் உணர்ந்த பாகவதோத்தமர் "அப்படியா அம்மா! ஆனால் இந்த அசுவத்த விருக்ஷத்தினடியில் வந்துட்காரு" என்றுசொல்லி அவள் காதில் அப்பொழுதே "ஆத்மோபதேசம்" செய்யலானார். அந்த உபதேசம் அவளுடைய பரிபக்குவ விசேஷத்தினால் அதிதீவிரமாகவே பலித்து அந்தக்ஷணம் முதல் "ஆத்மநிஷ்டை" கைகூடப்பெற்று, வெகு சீக்கிரத்தில்தானே ஆத்மானந்த ஸ்வானு

பவம்பெற்று அத்வைத சிகாமணியாய் வாயைத்திறந்த மாத்திரத்தில் வரகவிபாடும் சித்தி பெற்று எல்லாருக்கும் சத்தியத்தைப் போதித்து, திருவாங்கூர் சமஸ்தானத்திலும் திருநெல்வேலியிலும் பண்டித பாமரர்களெல்லாராலும் கொண்டாடப் பெற்று வெகு பிரபலமாயிருந்து விளங்கினரென்று தெரியவருகிறது. இந்த அம்மாள் தம்மனுபவங்களையும் உபநிஷத்துக்களின் சாராம்சத்தையும ஸ்வயமாக வரகவிபாடி விளங்கவைத்திருப்பதோடு இந்த பகவத் கீதாசார சங்கிரகத்தையும் திருவாய்மலர்ந்தருளினரென்று தெரிகிறது. இவருடைய பாடல்கள் திருநெல்வேலிப் பக்கங்களில் வீடுகள் தோறும் பெண்பாலரால் கர்ணபரம்பரையாகக்கேட்டுப் பாடம்பண்ணி காலாகாலங்களில் மனதைக் களிக்கச்செய்யும் பாட்டுகளாகவும், பூஜாகாலங்களில் பாராயணமாகவும், ஓதப்பட்டுவருகின்றன. இவையன்றி 'வேதாந்தவித்யாசோபனம்,' என்றும் 'வேதாந்தப்பள்ளு' என்றும் 'அன்னே பின்னே' யென்றும் பலவித பிரகாசப்பாட்டுகளும் அத்வைத சித்தாந்த உண்மைவிளங்க இவரால் பாடப்பட்டிருக்கின்றன. இந்தபகவத்கீதா சாரசங்கிரகம், 'பகவத்கீதை வசனம்' என்று தென்தேசத்துப் பெண்பெண்டிர்களால் நித்யபாராயண யோக்கியமாக அனுஷ்டிக்கப் பட்டுவருகிறது. இதை அப்படிப்பாராயணம் செய்யும் ஒருவர் வாய்ப்பிறப்பாகவே கேட்டுத் திருத்திச் சீர்ப்படுத்திப் பிரசுரிக்கலானோம். இதை முதல்முதல் இம்முகவுரை யெழுதுவோர் புத்திரசோகத்தால் வருந்தியகாலத்தில் தன் தர்மபத்னி வாயிலிருந்து வரக்கேட்டு ஆறுதலடைந்து அது முதல் ஆத்மஞானம் தேடுவதில் புத்திபாய்ந்தவராய்ப் பல வருஷங்கள் அத்தர்மபத்நீசமேதராகவே யுழைத்து ஈசுவரானுக்ரகம் பெற்றகாலத்தில் அப்பதிவிரதாசிகாமணி விதேகமுக்தி பெறப், பின்னே விடப்பட்ட தங்கிலம் ஸத்காரியத்தில் கழியவேண்டுமென்று சிந்தித்து அவ்வுத்தமியின் பக்திவிசேஷத்தால் தானடைந்த பெரும்பாக்கியத்தை உலகறியவெளியிட்டால் உத்தமபத்நீ தர்மமும் உண்மையிற் பிரியமும் புண்யபூமியாம் இப்பாதகண்டத்தில் முன்போல் விர்த்தியாகித்தழைக்குமென ஹிருதய பூர்ணமாய் நம்பி அவ்வுத்தமியின் ஞாபகார்த்தமாக ஆத்மவித்தையாம் நல்வித்தைச் சிறுவர் சிறுமிகளாம் பாலாது தூய ஹிருதயத்தில் இளம்பிராயத்தில்தானே விதைத்து, அதிலிருந்து பக்தி யென்னும் முளைகிளம்பி, சிரத்தை யென்னும் வேர்விட்டு, **தர்மம்** என்னும் தழைதழைத்து, **புநிதம்** என்னும் பூப் பூத்துப், **புண்யம்** என்னும் பிஞ்சுவிட்டு, பரிபக்குவகாலத்தில் அது முத்திப்பழ மீன்றருள அதிலிருந்து வரும் அழியாத இன்பரஸத்தைப்பருகி உண்மையான ஆனந்தானுபவமாம் இகபரபேத நித்யசுகத்தை இப்பிறவியிலேயே அனுபவிக்கச் சாதகமாகும்படி இதை இரண்டரை வருஷகாலமாகப் பல அன்பர்களுதவிகொண்டுழைத்துச்சேர்த்துத் திருத்திச்சீர்ப்படுத்தி பச்சிட்டு பிரம்மார்ப்பணமாக சமர்ப்பித்து வெளியிடலானர்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

குறிப்பு.—இதை வெளியிட உதவியாயிருந்த பல நண்பர்களில் விதேகமுக்தியடைந்த அம்மணியின் உயிர்த்தோழியும் ஆத்மபந்துவுமான ஸ்ரீகாமாக்ஷியம்மையும் இதை யெழுதுபவருக்கு ஆப்தநேசரான பிரம்மஸ்ரீமுத்துவையர் அவர்களும் தேவதாவிசுவாசமபாராட்டிச் செய்த உதவி மறக்கற்பாலதன்று. எல்லாக் கர்மங்களுக்கும் கர்த்தாவும், போகங்களுக்கு போக்தாவு

மாகவிருந்து கர்த்திருத்வ போக்திருத்வங்களினால் கட்டுப்படாத 'சந்நியாசசமுச்சாரி'யாகிய பகவான் திருவடியில் இதை சமர்ப்பித்தபின் இவருக்கு வந்தனமளிக்கவும் நமக்குவாயில்லையே! சுடம்பவது. ஓம் ஸ்ரீகிருஷ்ணயநமஃ

"வாசுதேவா! உன்னையேநம்பினேன்: உன் பாதாரவிந்தமேசரணம்"—ஸ்ரீலோகநாயகிவசனம்.

---

உ

*Om! Adorations to the Supreme Sri Krishna.*

# THE WORD OF THE LORD

## BEING AN EPITOME OF THE BHAGAVAT-GITA

### As Revealed to the World by a Self-Realised Soul

(Known as Avadaiyarammal.)

A GODLY WOMAN'S GIFT TO THE FAITHFUL AND TRUE OF HER SEX AND HER CHILDREN.

ஸ்ரீகிருஷ்ணய பரப்ரஹ்மணேநமஃ

# பகவத்கீதை வசனம்

என்னும்

# ஸ்ரீ பகவத்கீதா ஸார ஸங்கிரஹம்.

---

பாயிரம்

தெய்வ வணக்கம்

### உமாதேவியார் துதி.

குலதேவதையே, குருவேயென் றுண்டவரே
(உம்) வடிவே சரணமம்மா வந்தெனக்கு முன்னடைவீர்.
மலமாயை தீர்த்தவளே, மாஹேசுவரீ சரணமம்மா!
பூரண ஸ்வரூபியே புவனேசுவரீ சரணமம்மா!
தர்மாம்பிகையே தாயே சரணமம்மா!
தாயே, தயாநிதியே, சங்கரியே, ஐங்கரனைச்
சேயாகப் பெற்ற திருவே, முன் வந்தருள்வாய்;
முத்திதரு நாயகியே, முன்னைவினை தீர்த்தவளே,
பத்திரசம் தந்து பவபயத்தை வேரறுத்துச்
சித்தம் துலக்கிச் சிவத்வ மாற்றிவைத்துப்
பித்துறவு தீர்த்தெனக்குப் பேரறிவு தானளித்து

எப்போதும் ப்ரஹ்மரஸம் என்றனக்குத் தந்தவளே,
கற்பிதத்தை வேரறுக்கும் காந்திமதி காமாட்சி,
ஒப்புயர் வற்றவளே, உத்தமியே, உன்கிருபையால்,
மைப்புயல் வண்ணன் வசனித்த கீதைபதைப்
பத்தியுட னேயின்று பாங்காக நானுரைக்கப்
புத்தியுடன் வாக்குப் பொருந்த அளித்தருளித்
தட்டுவா ராமற் சாங்கமாக் கூட்டம்மா;
சற்குருவாய் வந்தென் ஜனனபயம் தீர்த்தவளே,
எப்போதும் எம்மை இரட்சிக்கும் ஈசுவரியே;
அற்புதமாம் பாதத் தனந்தநமஸ் காரமம்மா.

## சரஸ்வதி துதி.

சரஸ்வதியே யுன்றனையும் சரணமென்று வந்தடைந்தேன்,
நிரந்தரமா முன்வந்து நீயுமென்னைக் காத்தருள்வாய்;
பரமஹம்ஸர், பக்தர், பழுதற்ற ஞானியர்கள்,
திடமாக வேண்டுமென்று ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியன்று,
பகவான்தம் வாக்காற் பதினெட்டு அத்தியாயம்
உபதேசம் பண்ணினதை உற்றவுயிர்த் தோழனுக்கு,
உலகளந்த மாயவனார் உரைத்தவதன் ஸாரத்தைத்
தமிழாலே விஸ்தரிக்கத் தாயே அருள்புரிவாய்.
கருணையுள்ள ஸ்ரீகிருஷ்ணர் கண்ணான மைத்துனர்க்குத்
தெயவுடனே பார்த்துத் திருவுள்ளம் பற்றினதை
நயமா வுரைப்பதற்கு நாவிருந்து நீயருள்வாய்.

## தேவர் முனிவர் ஆசாரியர் முதலானோர் துதி.

மகிமையுள்ள ஈச்வரரே, மாதவரே, வேலவரே,
அகிலவுல கும்துதிக்கும் ஆதி விநாயகரே,
ஞானத்தை நல்கி நலமாக வாண்டருள்வீர்;
ஊனத்தை நீக்கி யுயர்வாக வாண்டருள்வீர்;
திங்களொடு கங்கை சிரசிற் றரித்துமலை
மங்கையொரு பாகம் மருவும் பரஞ்சுடரை
அண்டமெல்லா முண்டு அடியளந்த மாதவரை
எண்டிசையும் காத்திருக்கும் ஏற்றமுள்ள தேவர்களை,
எட்டுதிக்கும் கீர்த்தி யேறும் எதிர்வரரைச்,
சட்டமுட னேபடிக்கும் சாஸ்திரிகள் பாகவதர்,
சங்கரா சாரியரைச், சமயகுரு நால்வர்தமை,
அங்கமறை வேதியரை, அரியபல தேசிகரை,

வேத வியாசரை, விமல முனீச்வரரை,
நம்பியவர் பாதம் நமஸ்கரித்து நான்பணிந்தேன்.
அன்புடனே யென்னை யாளுமென்று தோத்திரித்தேன்.
எல்லாரும் என்னிடத்தில் இரங்கி அருள்சுரந்து,
அஞ்சாதே யென்று அபயஸ்தம் தந்தருள்வீர்.
நெஞ்சிலுள்ள கிலேசமெல்லாம் நீக்கி யருள்புரிவீர்.
அத்துவிதம் சொல்ல அருள்செய்து முன்னடைவீர்.

## ஸ்ரீ கிருஷ்ணபகவான் துதி.

கிருஷ்ண கிருபாநிதியே கிருபைசெய்து முன்னடைவீர்;
விருத்தாந்த மாயிருக்கும் வேதாந்த ஞானிகட்கு,
விருப்பமெலாம் விட்டொழிந்து மெய்ப்பொருளைக் கண்டோர்க்குத்,
திருப்பதத்தை நல்கியருள் தேவர்குலச் சிங்கமே,
ஜகத்தை விளக்கும் செழுஞ்சுடரே ஆண்டவரே,
அனர்த்தம் தவிர்த்தென் அபீஷ்டம் நிறை வேற்றிவைத்து,
அருச்சுனனுக் குஸ்வாமி அநுக்கிரகங்கள் பண்ணினதை
எப்படியோ நானறியேன் இதமாக வேயுரைக்க
ஒத்தாசை பண்ணி உறுதிப் படவெனக்குப்
புத்திக்குள் ளேயிருந்து புருஷோத்தமராயா,
அடியேனுக் காதரவாய் அநுக்கிரகிக்க வேண்டினேன்.

(தெய்வவணக்கம் முற்றிற்று.)

## அவையடக்கம்.

பேதையேன் சொல்லுமிதைப் பெரியோர்க ளெல்லாரும்
ஆதரவாய்க் கொள்ளுகைக்கு அவரருளை வேண்டினேன்.
இலக்கியமும் நானறியேன், இலக்கணமும் நானறியேன்,
கலைக்ஞானம் தானறியேன், கல்வியில்லேன். ஆனாலும்,
சித்திரம்போற் பெற்ற சிறுகுழந்தைப் பாலன்சொல்
புத்தமுதம் போலுவந்து பூரித்துக் கேட்பாள்தாய்,
அப்படிப்போல் என்னிடத்தில் ஆதரவுண் டாமானால்,
எப்படிநான் சொன்னாலும் இதமாக வேயிருக்கும்.

(அவையடக்கம் முற்றிற்று.)

பாயிரம், முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணய பரப்ரஹ்மணேநமஃ



